[23rd September 1958

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : தவறுகளை திருத்த முடியுமானால் திருத்தலாம். இல்லாவிடில் கோர்ட்டுக்கு போகலாம்.

SRI S. M. ANNAMALAI : ரெவின்யூ இன்ஸ்பெக்டர் கொடுத்த கம்ப்ளெய்ண்ட் தவறானது என்பது நிரூபிக்கப்பட்டுவிட்டது. ஆகவே. . .

MR. SPEAKER : யாரால் நிரூபிக்கப்பட்டது என்று அங்கத்தினர் அவர்கள் சொல்ல முடியுமா ? நிரூபிக்கப்பட்டுவிட்டது என்று இந்த சபையில் எப்படி சொல்லலாம் ?

SRI S. M. ANNAMALAI : போலீஸ் நடவடிக்கைகள் எடுத்து விசாரித்ததில் அது தவறான கம்ப்ளெயின்ட் என்று சொல்லிவிட்டார்கள்.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : போலீசில் இருந்து ஒரு புகாரும் வரவில்லை. எந்த ரிப்போர்ட்டும் வரவில்லை.

SRI P. S. SANTHANAM : இந்த தேர்தலில் நடந்த ஒரு தில்லுமுல்லானதுபற்றி அங்கு நடந்த கலவரத்தைப்பற்றி கிராம உத்தியோகஸ்தர்கள் விசாரிக்கப்பட்டார்களா ?

SRI P. S. K. LAKSHMIPATHI RAJ : ஆன் எ பாயின்ட் ஆப் ஆர்டர், ஸார். சபையில் " தில்லுமுல்லு " என்ற வார்த்தையை உபயோகிக்கலாமா ?

MR. SPEAKER: அது பார்லிமெண்டரியில்லை என்று சொல்ல முடியாது.

THE HON. SRI C. SUBRAMANIAM : It has no significance at all.

*Radio sets*

* 431 Q.—SRI P. G. MANICKAM : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

தேசீய விஸ்தரிப்புத் திட்ட பிரதேசங்களிலே எத்தனை கிராமங்களுக்கு State Broadcasting Department மூலமாக ரேடியோ செட்டுகள் சப்ளை செய்யப்பட்டிருக்கின்றன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : 326.

SRI P. G. MANICKAM : கிராமங்களில் எந்தெந்த ஸ்தாபனங்களுக்கு இந்த ரேடியோ செட்கள் வழங்கப்படுகிறது. தனிப்பட்ட நபர்கள் விரும்பினால் அவர்களுக்கும் வழங்க திட்டமிருக்கிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : தனிப்பட்ட நபர்கள் வேண்டுமானால் ரேடியோ செட்களை விலைக்கு வாங்கிக்கொள்ளலாம்.

SRI A. VEDARATHNAM : இந்த ரேடியோ செட்கள் எங்கிருந்து தருவிக்கப்படுகிறது ? நம் மாநிலத்தில் ரேடியோ செட்கள் செய்துகொண்டிருந்தார்களே. அது என்னவாயிற்று ? இங்கு செய்யப்படும் செட்களுக்கு அரசாங்கம் சலுகை அளித்து அவைகளை கிராமங்களில் அமைக்க முன்வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்பொழுது " டைரக்டர் ஜெனரல் ஆப் சப்ளைஸ் அன்ட் டிஸ்போஸல்ஸ் " மூலம்தான் செட்டுகள் வாங்கப்படுகிறது. நம் செட்களையும் அவர்களே வாங்கி விநியோகிக்கிறார்கள். இன்டஸ்ட்ரியல் எஸ்டேட்டில் செய்யப்பட்டு வருகிற செட்களும் இன்று மத்திய சர்க்காரால் வாங்கப்பட்டு அவைகளும் வழங்கப்பட்டுவருகிறது.

23rd September 1958]

**Sri J. MATHA GOWDER** : கோயம்புத்தூரில் இருக்கிற ஜி.டி. நாயுடு அவர்கள் செய்யும் செட்களின் விலை மிகவும் குறைவாக இருப்பதால் அவைகளை வாங்கி கிராமங்களுக்கு கொடுக்க அரசாங்கத்திற்கு உத்தேசம் உண்டா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : இதுவரையில் வாயளவில் தான் அந்தத் திட்டம் நிறைவேறியிருக்கிறதே தவிர, இன்னும் நாம் எல்லோரும் வாங்கும் அளவிற்கு அது முன்னேறவில்லை என்பது தான் நான் தெரிந்த வரையில்.

**Sri R. KRISHNASAMI NAIDU** : தேசிய விஸ்தரிப்புத்திட்ட பிரதேசங்களில் வாங்கி கொடுக்கப்படும் ரேடியோ செட்கள், மின்சாரம் இருக்கக்கூடிய பகுதிகளில் மெயின் செட்கள் என்று வைக்கப்படுகிறது. மின்சாரமில்லாத பகுதிகளில் பாட்ரி செட்டுகள் வைக்கப்படுகிறது. பாட்டரி செட்கள் என்றால், வருடம் ஒன்றுக்கு 90 ரூபாய் பஞ்சாயத்திலிருந்தோ, பொதுமக்களிடமிருந்தோ அரசாங்கம் வாங்குகிறது, அதை நிர்வகிக்க. ஆனால் மின்சாரத்தில் இயங்கும் ரேடியோ செட்கள் உள்ள இடங்களில் ஆண்டுக்கு 20 ரூபாய் கூட செலவு ஏற்படுவதில்லை. அப்படி இருந்தும் மெயின் செட்கள் வைக்கும் இடங்களில்கூட 90 ரூபாய் வசூலிக்கிறார்கள். இது பல ஆண்டுகளாக நடைபெற்று வருகிறது. ஆகவே, மெயின் செட்கள் உள்ள இடங்களில் இந்தச் செலவை மட்டும் வசூலிக்க ஏற்பாடு செய்யப்படுமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : அதைப்பற்றிய தகவல் இப்பொழுது என்னிடம் இல்லை. தனியாக கேள்வி கேட்டால் பதில் சொல்கிறேன்.

**Sri V. K. KOTHANDARAMAN** : தேசிய விஸ்தரிப்புத்திட்ட பிரதேசங்களில் உபயோகப்படுத்தக்கூடிய ரேடியோக்களில் ஒரு குறிப்பிட்ட ஸ்டேஷன்களைத்தான் வைக்கவேண்டுமென்ற நிபந்தனை ஏதாவது உண்டா ? அப்படியிருந்தால், அதற்கு காரணம் என்ன ? அது நீக்கப்படுமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : ஆமாம். நிபந்தனையுண்டு. ஏனெனில், இது, வெறும் பாட்டுகள் கேட்பதற்காக மட்டும் அல்ல, ரேடியோ நிலையங்கள். அதன் மூலம் பல முக்கியமான விஷயங்களை கிராம மக்களுக்கு அறிவிக்க வேண்டி இருக்கின்றன. அவைகளை மக்கள் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும். ஆகவே இஷ்டம் போல் அவரவர்கள் நிகழ்ச்சிகளை மாற்றி வைத்துக்கொண்டிருந்தால் முக்கியமான நிகழ்ச்சிகளையெல்லாம் கிராம மக்கள் கேட்க வசதியில்லாமல் போய்விடும். ஆகவே, சில முக்கியமான, திருச்சி, மதராஸ் போன்ற ஸ்டேஷன்களை மட்டும்தான் கேட்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

(Sri A. A. Rasheed and Sri K. Vinayakam were seen raising their hands.)

**Mr. SPEAKER** : If more Members want to put supplementaries on this question, I have no objection. But the result will be that time will not be available to allow the Members to put supplementaries on the subsequent questions. I want to make that clear even now. Later, it should not be complained, just as some hon. Member did yesterday, that the Speaker did not give sufficient opportunities for putting supplementaries on the remaining questions. About 75 questions are included in the list of questions everyday for being answered. At the same time, if the hon. Members want to put ten supplementary questions on each question, it will be mathematically impossible to allow them. I leave it to the

hon. Members. If they want to put a large number of supplementaries on every question, I am afraid about 25 questions or so will not be answered. I leave the choice to the hon. Members. Now, Mr. Rasheed may put his supplementary question.

SRI A. A. RASHEED : Have the Government made any representation to the Union Government regarding the class of music that is broadcast from Akashvani?

SRI K. VINAYAKAM : Is the Hon. Minister aware of the fact that most of the sets that are installed in these centres go out of order and do not work for want of a mechanic who could turn up in time and rectify the defects immediately?

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I do not think that the hon. Member is justified in making such a sweeping remark. As a matter of fact, there are servicing facilities for all these sets.

*Physical Education*

* 432 *Q.*—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the amount spent on Physical Education and Youth culture in 1957–58; and

(*b*) the number of institutions receiving aid from the Government for Physical Education and the number of instructors and lecturers empoyed therein?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Rs. 1,82,987, Sir.

(*b*) Number of institutions receiving aid is 3 and the number of instructors and lecturers employed is 2 and 18 respectively.

SRI M. JAGANNATHAN : Sir, the proverb says, " There is a sound mind in a sound body ". Physical development is as much important as mental development. I find that the . . .

MR. SPEAKER : The hon. Member is making a speech.

SRI M. JAGANNATHAN : I am putting a question, Sir.

MR. SPEAKER : No, he is not. The hon. Member is making a speech.

SRI M. JAGANNATHAN : Others have also done it. Let me finish . . .

MR. SPEAKER : The hon. Member must put it in the form of a question and should not make a speech.

SRI M. JAGANNATHAN : I am putting a question, Sir.

MR. SPEAKER : The hon. Member is not putting a question. That is my difficulty.